# இராமாயணம் மகாபாரதம் பாகவதம்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# இராமாயணம்
# மகாபாரதம் பாகவதம்


இயற்றியவர் :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. R. வரதராஜன், B. A., B. T.


சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு





## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா

விலை ] 1987 [ ரூ. 2-00

SIVANANDA CENTENARY PUBLICATION



* O *

Translation of

# "RAMAYANA, MAHABHARATA & BHAGAVATA"

[ From 'BLISS DIVINE' ]

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of :*

THE LITERARY PRESS
Salem
in Commemoration of their
successful 50 years
in printing industry

Printed at The Literary Press, Salem - 636 001.

# இராமாயணம்
# மகாபாரதம் பாகவதம்

## இராமாயணம்

வால்மீகி முனிவரின் இராமாயணம் இந்த உலகத்திலுள்ள இதிகாசங்களுள் மிகப் புராதன மானதும் புகழ்பெற்றதுமாகும். அது ஆதிகாவியம் (முதன் முதலில் எழுதப்பட்ட காவியம்) என்று வழங்கப்படுகிறது. மனித வாழ்க்கையை உருவாக்கக்கூடிய சிறந்த ஆற்றல் இராமாயணத் தினிடம் உள்ளது. கணவன் மனைவியரும், பெற்றோரும் மக்களும், சகோதர சகோதரிகளும், நண்பர்களும் விரோதிகளும் கற்க வேண்டிய நீதிகள் அதில் நிறைந்துள்ளது.

தோற்றம் :

ஒருசமயம் வால்மீகி முனிவர் நாரதரைப் பார்த்துக்,கீழ்க்கண்டவாறு கேட்டார்: "வணங்கத் தகுந்த முனிவரே! ஒரே சமயத்தில், அறமும், வீரமும், சத்தியமும், பெருந்தன்மையும், கடமை தவறாத எண்ணமும், அனைத்துயிர்களிடத்தும் அன்பும் உடைய மனிதன் எவனாவது இந்த உலகத் தில் இருக்கின்றானா?"

அதற்கு நாரதர் கீழ்க்கண்டவாறு பதில் சொன்னார்: அந்த மாதிரியான குணங்களுடன் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்த இராமன் என்னும் பெயருடைய அரச குமாரன் இருக்கின்றான். அவன் அறம் தவறாதவன், வீரமுடையவன், பெருந்தன்மையுடையவன், அறிவு நிறைந்தவன், மாபெரும் வீரன். அவன் தன்னுடைய குடிமக்களை

மிகவும் நேசிக்கிறான். அவன் உறுதியுடனும் நேர்மை தவறாமலும், நீதி தவறாமலும் இரக்க சிந்தனையுடனும் விளங்குகின்றான். அவன் வேதங்களை ஓதியவன்; போர்க்கலையில் வல்லவன். அவன் ஈடு இணையற்ற பண்பாளன்; ஒப்பற்ற அழகுள்ளவன். அவன் பெற்றோருக்குப் பணியும் மகனாகவும், பாசமுள்ள சகோதரனாகவும், அன்புள்ள கணவனாகவும், நம்பிக்கையுள்ள நண்பனாகவும், அரசர்களுக்கு எடுத்துக் காட்டாகவும், இரக்கமுள்ள பகைவனாகவும், உயிர்கள் அனைத்தையும் நேசிப்பவனாகவும் திகழ்கிறான். மக்கள் அனைவரும் அவனைப் போற்றுகின்றனர்''.

நாரதரிடம் கேட்டறிந்த விளக்கங்களால் எழுந்த சிந்தனைகளால் தூண்டப்பட்டவராய், வால்மீகி முனிவர் தமஸா நதிக்கரையில் உலாவிக் கொண்டிருந்தார். அப்போது இரண்டு கிரவுஞ்சப் பறவைகள் ஒன்றோடு ஒன்று காதல் விளையாட்டுகளில் களித்துக்கொண்டு இருப்பதைப் பார்த்தார். அங்கு திடீரென்று தோன்றிய கொடிய வேடன் ஒருவன் ஆண் பறவையை அம்பால் எய்தான். ஆண் பறவை தரையில் விழுந்து துன்பத்தால் வருந்தித் துடிப்பதைக்கண்ட பெண் பறவை கத்திப் புலம்பித் தன் வருத்தத்தை வெளிப்படுத்தியது. அடிபட்டு விழுந்துத் துடித்துக் கொண்டிருந்த பறவையையும், அதனால் மனம் வருந்திப் புலம்பிக் கொண்டிருந்த பெண் பறவையையும் கண்டு வருந்திய வால்மீகி முனிவர், ''வேடனே! தன் காதலியுடன் இன்பம் துய்த்துக் கொண்டிருந்த கிரவுஞ்சப் பறவையைக் கொன்ற உனக்கு எப்போதும் அமைதி கிட்டாது'' என்று கோபத்துடன் கூறினார். அவருடைய வாக்கு எட்டுசீர்களைக் கொண்ட நான்கு அடிகளைக் கொண்ட பாடல்களாக அமைந்தது.

அப்போது படைக்கும் கடவுளான பிரம்ம தேவன் முனிவரின் முன்னே தோன்றினார். ''இராமனுடைய கதையை இனிய இசை வடிவில் பாடு. இந்த உலகம் உள்ளளவும், விண்மீன்கள் வானத்தில் ஒளிரும் அளவும், உன் கவிதை மக்களால் பாடப்பட்டு வரும்'' என்று சொல்லிவிட்டு பிரம்மதேவன் மறைந்தார். பிரம்மதேவரின் அருளால் இராமபிரானுடைய வரலாற்றை அறிந்த வால்மீகி முனிவர், தியானத்தில் அமர்ந்து தன்னுடைய யோகக் கண்களால் இராமனுடைய வரலாற்றில் நிகழ்ந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அறிந்து உணரலானார். அப்பொழுதே அவற்றை தொகுத்து எழுதத் தொடங்கினார். இராமாயணமாகிய இனிய பாடல் அம்பால் அடிபட்ட கிரவுஞ்சப் பறவையிடம் தோன்றிய அன்பு, இரக்கம் ஆகியவற்றின் காரணமாகத் தோன்றியது. கிரவுஞ்சப் பறவையிடம் ஏற்பட்ட இரக்கத்தினால் தோன்றிய காவியத்தை இராமாயணத்தோடு ஒப்பிட்டு, கீழ்க்கண்டவாறு கூறலாம். இராமனையும், சீதையையும் இரண்டு கிரவுஞ்சப் பறவைகளுக்கும், இராவணனைக் கொடிய வேடனுக்கும் ஒப்பிடலாம். கொடிய வேடனான இராவணனால், சீதை இராமனிடமிருந்து பிரிக்கப் பட்டாள். இந்த நிகழ்ச்சிகளில் சிறிது ஒற்றுமை இருக்கிறது. வேடனின் கொடிய செயல் வால்மீகி முனிவர் இராமாயண காவியத்தை இயற்றுவதற்கான தூண்டுதலாக அமைந்தது.

வால்மீகி இராமாயணத்தில் 24,000 செய்யுட்கள் உள்ளன. அவை 500 பாக்கள் கொண்ட அத்தியாயங்களாக அமைந்து உள்ளன. இவை அனைத்தும் கீழ்க்கண்ட ஏழு காண்டங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவை பால காண்டம்,

அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்திர காண்டம் என்பனவாகும். மிகவுயர்ந்ததும், தூயதுமான வடமொழிப் பாக்கள் நிறைந்தது இராமாயணம். இராமனுடைய மக்களான குச, லவர்கள் இந்தக் காவியத்தை முதன் முதலில் மக்களுக்கு இசையுடன் பாடிக் காட்டினார்கள். தங்கள் குருவாகிய வால்மீகி முனிவரின் ஆசிரமத்திலிருந்து துறவிகள் உருவில் வந்து, தங்கள் தந்தை இராமபிரான் மற்றும் இராமாயணத்திலுள்ள கதாபாத்திரங்களின் முன்னே இந்த அற்புதக் காவியத்தைப் பாடினார்கள்.

இராமாயணம் மிகவும் உயர்ந்த காவியம். அதில் வேதங்கள், மறை நூல்கள் ஆகியவற்றின் சாரம் அடங்கியுள்ளது. அது மனிதனுக்கு அற்புதப் பொக்கிஷம் அல்லது கருவூலம்போன்றது. அமர நிலையாகிய அமிர்தம் நிறைந்த தடாகம்போன்றது. அரசையும் புலனின்பங்களையும் உலகியல் இன்பங்களையும் உதறிவிட்டு அரண்மனையைவிட்டு வெளியேறித் தன் தந்தையின் சொல்லைக் காப்பாற்றுவதற்காகப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசித்த மகனின் சிறப்பைப் பற்றிக் கூறுகிறது. அது தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக தன்னுடைய அன்புக்குரிய மகனைக் கூட நாட்டை விட்டு அனுப்பிய தந்தையின் சிறப்பைப் பற்றிக் கூறுகிறது. இலட்சியப் பெண்ணும் கற்புடையவளுமான ஒரு மனைவி வாழ்நாள் முழுவதும் கணவனிடம் உறுதியான அன்பு கொண்டு அவனுடைய துன்பங்களில் பங்கு கொண்டு, காட்டிலும் சிறிதும் சோர்வில்லாமல் அவனுக்குப் பணிவிடைகள் செய்து, அவனைத் தெய்வமாகவே கருதிய மனைவியின் கதையை அது விவரிக்கிறது. எல்லாவற்றையும்

விட மேலாகத் தன்னுடைய சகோதர வாஞ்சையை உயர்வாகக் கருதி, அதன் காரணமாக அரண்மனையி லுள்ள இன்பங்கள் எல்லாவற்றையும் துறந்து தன் சகோதரன் பின்னே காட்டிற்குச் சென்று அவனுக் கேற்பட்ட துன்பங்களைத் துடைக்க உதவிய தம்பியின் சிறப்பைப் பற்றிக் கூறுகிறது.

இராமாயணத்தில் கூறப்பட்டுள்ள இயற்கையைப் பற்றிய வருணனை மிக அழகும், சிறப்பும் கொண்டது. அதைப் படிக்கும் ஒருவர் இயற்கையிலுள்ள மலைகள், நதிகள், மரங்கள், பறவைகள் ஆகியவை மனிதனின் இன்பதுன்பங்களில் பங்கு கொண்டன என்பதை உணரலாம். அதிலுள்ள போர்க்களக் காட்சிகள் மகத்தானவை. இராமாயணத்தின் முக்கியமான சிறப்பு அதன் எளிமைதான். பரிவும் கருணையும் இந்தக் காவியம் முழுவதும் ததும்பி வழிகின்றது. கவிதையும் ஒழுக்கமும் முற்றிலும் இணைந்துள்ளன. ஒழுக்கம் மிகவும் சிறப்பாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இதில் வரலாற்றுச் சிறப்பும் உள்ளது. இது ஒரு புராதனமான நூல். இது எதுகை மோனை மட்டும் நிறைந்த பாடல் அல்ல. எல்லாக் காலங்களிலும் மக்களுக்கு உணர்வூட்டக்கூடிய நூல் இது. பல நூற்றாண்டுகளாகப் பல்லாயிரக் கணக்கான மக்கள் வாழ்வை வளப்படுத்தியிருப்பதோடு, வரும் காலத்திலும் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளிலும் அவ்வாறே விளங்கும் என்பதில் ஐயமில்லை.

ஏழு காண்டங்களின் பொருளடக்கம் :

பாலகாண்டத்தில் 'இராமாவதாரத்தைப் பற்றியும் இராமபிரானுடைய குழந்தைப் பருவத்தைப்பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. இராமபிரான், விசுவாமித்திரருடைய வேள்வியைக் காத்து

அவருக்கு உதவி செய்கிறார். தாடகை என்னும் அரக்கியையும் சுபாஹுவையும் கொல்கிறார். அகல்யைக்கு சாபத்தினின்றும் விடுதலை அளிக்கிறார். சிவதனுசை முறித்து ஜானகியை மணம் செய்து கொள்கிறார். பரசுராமரை வென்று அவர் கர்வத்தை அடக்குகிறார்.

அயோத்தியா காண்டத்தில் இராமபிரானுக்கு இளவரசு பட்டம் சூட்டுவதற்காக ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. அவருடைய மாற்றாந்தாயான கைகேயி அதற்குத் தடையாக இருந்து, இராமனைப் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்வதற்காக அனுப்பிவிடுகிறாள். தம்பி இலட்சுமணனும் மனைவி சீதையும் இராமனைப் பின் தொடருகிறார்கள். இராமனைப் பிரிந்து பெருத்த மனத்துயரம் அடைந்து, வருத்தத்தினால் இறக்கிறார் தசரதர். இராமன், இலட்சுமணன், சீதை ஆகிய மூவரும் வேடர் தலைவனான குகனால் உபசரிக்கப்படுகிறார்கள். அவன் உதவியால் கங்கையைக் கடந்து, பரத்துவாஜ முனிவரைச் சந்திக்கிறார்கள். அவர் சொற்படி சித்திரகூட மலையைச் சென்று அடைகிறார்கள். அங்கு புல்லாலும் தழைகளாலும் வேயப்பட்ட குடிலை (பர்ணசாலையை) அமைக்கிறார்கள். இராமனின் மற்றொரு சகோதரனான பரதன் அங்கு வந்து இராமனை அயோத்திக்குத் திருப்பி வருமாறு கேட்டுக்கொள்கிறான். இராமன் மறுத்துவிடவே அவருடைய பாதுகைகளைப் பெற்றுத் திரும்புகிறான். பரதன் இராமனுடைய பாதுகைகளை அரியணையில் வைத்து அவனுடைய பெயரால் நந்தி கிராமத்தில் இருந்து கொண்டு ஆட்சி செலுத்துகிறான்.

ஆரண்ய காண்டத்தில் விராதன் என்னும் அரக்கன் இராம இலட்சுமணர்களைத் தண்டகாரணியம் என்னும் வனத்தில் தாக்குகிறான்.

அவர்கள் அரக்கனோடு போரிட்டு அவனைக் கொல்கிறார்கள். அதன் பின் அவர்கள் சரபங்கர், சுதீச்சணர், அத்திரி ஆகிய முனிவர்களை சந்திக்கிறார்கள். அத்திரி முனிவரின் மனைவியான அனுசூயை என்பவர் சீதைக்கு ஒரு மனைவி கணவனுக்கு ஆற்றவேண்டிய கடமைகளைப்பற்றி விரிவாக எடுத்துரைக்கிறார். பின்னர் அகத்திய முனிவரைச் சந்திக்கிறார்கள். அவர் இராமனுக்குத் தெய்வீக வலிமை பொருந்திய ஆயுதங்களைத் தந்து உதவுகிறார். பஞ்சவடியில் தங்கி இருந்த போது சூர்ப்பனகை என்னும் அரக்கியைச் சந்திக்கிறார்கள். இலட்சுமணன் அவளுடைய மூக்கையும், காதுகளையும் வாளால் அறுத்து அவமானப்படுத்தி விடுகிறான். அதனால் அவள் சகோதரர்களான கரன், திரிசரன் என்னும் அரக்கர்கள் பதினாலாயிரம் அரக்கர்களுடன் வந்து போரிட்டு, இராம லட்சுமணர்கள் கைகளால் மடிகிறார்கள். சூர்ப்பனகை இலங்கைக்கு ஓடி, தன் அண்ணனாகிய இராவணனிடம் முறையிடுகிறாள். இராவணனுடைய திட்டப்படி, அவன் மாமனாகிய மாரீசன் என்னும் அரக்கன் பொன்மான் உருவெடுத்து இராமன், இலட்சுமணன், சீதை ஆகியவர்கள் முன்னே தோன்றுகிறான். சீதை மாயமானைப் பிடித்துத் தருமாறு இராமனை வேண்டுகிறாள். அதைப்பிடிக்கச்சென்ற இராமன் அதை அம்பு எய்து கொன்று விடுகிறான். இராமன் உதவிக்கு இலட்சுமணன் சென்றதனால் இருவரும் பிரிந்திருந்தபோது இராவணன் சீதையை எடுத்துச் செல்கிறான். வழியில் கழுகரசனான ஜடாயு இராவணனை எதிர்த்துப் போராடிப் படுகாயமடைகிறான். இறக்கும் தருவாயில் இருந்த ஜடாயுவிடமிருந்து சீதையைப் பற்றிய எல்லா விவரங்களையும் இராமன் தெரிந்து கொள்ளுகிறான். விவரங்களறிந்த இராமன் பெரும்

மனத்துயரில் ஆழ்கிறான். பின்னர் பம்பையாற்றங் கரையில் இராம லட்சுமணர்கள் கபந்தனைக் கொல் கிறார்கள். அதன் பின்னர் சபரி என்னும் வயதான அடியவளைச் சந்தித்து அவள் பக்தியுடன் தந்த கிழங்குகளையும் கனிகளையும் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்கிறார்கள்.

கிஷ்கிந்தா காண்டத்தில், இராம லட்சுமணர் கள், பம்பையாற்றங்கரையில் அனுமனைச் சந்திக் கின்றார்கள். அவனோடு ரிஷியமுக பர்வதத்துக்குச் சென்று சுக்ரீவனோடு தோழமை பூணுகிறார்கள். சுக்ரீவன் இராமனின் துணையோடு தன் அண்ணன் வாலியைக் கொல்கிறான். சுக்ரீவன் கிஷ்கிந்தைக்கு மன்னனாக முடிசூடுகிறான். இராமன் வாலியின் மனைவியான தாரைக்கு ஆறுதல் கூறுகிறான். அதன் பின்னர் அனுமான் வானர வீரர்களுடன் சீதையைத் தேடிப் புறப்படுகிறான். அனுமன் இராமனுடைய கணையாழியைத் தன்னுடன் அடை யாளமாக எடுத்துச் செல்லுகிறான். எல்லா இடங் களிலும் கவனமாகத் தேடியும் சீதையைக்காண முடியவில்லை. அனுமனுடனிருந்த கரடிகளின் தலைவனான ஜாம்பவான், ஜடாயுவின் சகோ தரனான சம்பாதி என்ற கழுகிடமிருந்து சீதையைப்பற்றிய விவரங்களை அறிகிறான். அவன் சொன்ன விவரங்களின்படி அனுமன் ஒரு மலையின் மீதேறி, கடலைத்தாண்டி இலங்கையை அடைவ தற்காக வானத்தை நோக்கித் தாவிச் செல்லுகிறான்.

சுந்தர காண்டத்தில், அனுமானுடைய வீரச் செயல்கள் விவரிக்கப்படுகின்றன. அனுமன் வான வெளியில் சென்று கொண்டிருந்த போது, சமுத்திரத்தின் வேண்டுகோளின்படி மைநாகம் என்னும் மலை அனுமனைத் தன்னுடைய சிகரத்தில்

இறங்கிச் சற்று இளைப்பாறிச் செல்லுமாறு கேட்டுக் கொள்கிறது. பிறகு சிம்கிகா என்ற அரக்கி அனுமனுடைய நிழலைப்பிடித்திழுத்து அவனை விழுங்கப் பார்க்கிறாள். அனுமன் அவளைக் கொல்கிறான். பிறகு இலங்கையைச் சற்று தூரத்தில் இருந்து பார்க்கிறான். இலங்காபுரிக்குள் இரவில் நுழைகிறான். அசோக மரங்களடங்கிய சோலையில் சீதையைப் பார்க்கிறான். இராமன் தெரிவித்த செய்தியை அவளிடத்தில் கூறி இராமனுடைய கணையாழியையும் அவளிடம் கொடுக்கிறான். பிறகு அனுமன் அசோகவனத்தை அழிக்கிறான். அரக்கர்கள் அனுமனைச் சிறை செய்கிறார்கள். அனுமன் தன்னை விடுவித்துக்கொண்டு இலங்கை நகருக்குத் தீயிடுகிறான். அதன் பின்னர் இராமன் தங்கியிருந்த இடத்துக்கு வந்து சீதை அடையாளமாக அளித்த சூடாமணியை இராமனிடம் கொடுக்கிறான். சீதையைப்பற்றிய செய்தியைக் கேட்டும் அவள் அனுப்பிய சூடாமணியைப் பெற்றும் இராமன் மிகவும் மகிழ்ச்சியுறுகிறான்.

யுத்த காண்டத்தில், வானரத் தலைவர்களில் ஒருவனான நளன் கடலரசனின் ஆலோசனைப்படி கடலுக்குமேலே பாலம் ஒன்றை அமைக்கிறான். வானர சேனையுடன் வீரர்கள் பாலத்தைக் கடந்து இலங்கை நகரை அடைகின்றார்கள். இராவணனுடைய சகோதரனான விபீஷணன் அவர்களுடன் சேர்ந்து கொண்டு, இராவணனையும் அவனுடைய சேனையையும் எவ்வாறு அழிப்பதென்று ஆலோசனை கூறுகிறான். பின்னர் நடக்கின்ற போரில், கும்பகர்ணன், இந்திரஜித்து, இராவணன் ஆகியோர் கொல்லப்படுகிறார்கள். போரில் இராமன், இராவணன் ஆகியோருடைய சேனையிலுள்ள வீரர்கள் மந்திர சக்தி வாய்ந்த அம்புகளை எய்கிறார்கள். இராமன் ஒருமுறை அம்பு எய்தபோது அரக்கர்கள்

அனைவரும் இராமனாகவே காணப்படுகிறார்கள். அவர்கள் ஒருவரோடொருவர் போரிட்டு மடிகிறார்கள். ஒருசமயம் இராவணன் நாகாஸ்திரத்தை எய்கிறான். கோரமாக வாயைப் பிளந்துகொண்டும் நாக்கை நீட்டிக்கொண்டும் சுற்றிலும் நெருப்பைக் கக்கிக் கொண்டும் பாம்புகள் பாய்ந்து வருகின்றன. ஆனால் இராமன் கருடாஸ்திரத்தை விட்டு அந்த நாகாஸ்திரத்தில் வெளிப்பட்ட எல்லா பாம்புகளையும் வெட்டித் தள்ளுகிறான். இராமன் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து இராவணனைக் கொல்கிறான். சீதை சிறைமீட்கப் படுகிறாள். சீதை தீயில் குளித்துத் தன் தூய்மையை வெளிப் படுத்துகிறாள். விபீஷணனுக்கு இலங்கையின் மன்னனாக முடிசூட்டப் படுகிறது. இராமன் தன்னைச் சேர்ந்தவர்களுடன் அயோத்தி நகருக்குப் புஷ்பக விமானத்தில் திரும்புகிறான். இராமன் சக்கரவர்த்தியாக முடிசூடுகிறான். அயோத்தியின் மக்கள் அளவு கடந்த ஆனந்தத்தில் ஆழ்கிறார்கள்.

உத்தர காண்டத்தில், இராமனுடைய ஆட்சி இராம இராஜ்யம் என்று வருணிக்கப் படுகிறது. எங்கும் தருமம் தழைத்தோங்குகிறது. நாடெங்கும் செல்வமும் செழிப்பும் நிலவுகிறது. நோயும் பிணியும் எங்கும் இல்லை. அங்கு திருடர்களோ கொள்ளைக்காரர்களோ இல்லை. உயிரும் சொத்துக் களும் அழிவின்றி இருந்தன. நான்கு வருணத் தாரும் தத்தம் கடமைகளைச் செவ்வனே செய்து வந்தனர். நீண்ட நாட்கள் சிறப்புடன் ஆட்சி செலுத்திய பின்னர் இராமன் தன்னுடைய பரமபத மாகிய சாகேதபுரிக்குத் திரும்பிச் செல்கிறான்.

இராமாயணத்தின் பொருளை தத்துவார்த்த மாகக் கீழ்க்கண்ட முறையில் கூறலாம். இராவணன் அகங்காரம் அல்லது கர்வத்தைக்

குறிக்கிறான். அவனுடைய பத்து தலைகளும் பத்து இந்திரியங்களைக் குறிக்கின்றன. இலங்கை நகர் ஒன்பது வாயில்களையுடைய இந்த உடலைக் குறிக்கிறது. விபீஷணன் அறிவைக் குறிக்கிறான். சீதை என்பது அமைதி. இராமன் என்பது ஞானம். இராவணனைக் கொல்வது என்பது அகந்தையைக் கொன்று இந்திரியங்களை அடக்குவது. சீதையை மீண்டும் அடைவது என்பது ஜீவன் தன்னுடைய ஆசைகளின் காரணமாக இழந்த அமைதியை மீண்டும் பெறுவதைக் குறிக்கும். ஞானத்தை அடைய இராமபிரானைத் தரிசிக்க வேண்டும்.

மோகமாகிய கடலைக் கடந்து, ராக துவேஷம் என்னும் விருப்பு வெறுப்புக்களாகிய அரக்கர்களை அழிக்கின்றவன் ஒரு யோகியாவான். அவன் அமைதியோடு இணைந்து, ஆன்மாவில் நிரந்தரமாக ஒன்றுபட்டு, முடிவில்லாத பேரானந்தம் அடைகிறான். இராமன் சத்தாகிய நல்லதையும் இராவணன் 'கெட்டதையும்' குறிக்கிறார்கள். இராமனும் இராவணனும் ஒருவரோடொருவர் போரிடுகிறார்கள். முடிவில் இராமன் வெற்றி பெறுகிறான். நல்லது எப்போதும் தீயதை வெல்கிறது.

---

## மகாபாரதம்

மகாபாரதம் கிருஷ்ணதுவைபாயனர் என்ற வியாச முனிவரால் இயற்றப்பட்டது. அவர் இந்த இதிகாசத்தின் நாயகர்களின் பாட்டனூர் ஆவார். இந்த இதிகாசத்தை அவர் தம் மகனை சுகருக்கும் அவருடைய சீடர்களான வைசம்பாயனர் ஆகியோருக்கும் உபதேசித்தார். மகாபாரதத்தின் கதா நாயகர்களின் பேரனுகிய பரீட்சித்தின் மகன் ஜனமேஜய மன்னன் பெரிய வேள்வி ஒன்றைச் செய்தான். அப்போது வியாச முனிவரின் ஆணைப்படி இந்த இதிகாசம் வைசம்பாயனரால் ஜனமேஜயனுக்குச் சொல்லப்பட்டது. பின்னர் சௌதி என்பவர் மகாபாரதத்தை நைமிசாரண்ய வனத்தில் சௌனகர் என்பவர் வேள்வி ஒன்றைச் செய்தபோது சொன்னூர்.

மகாபாரதத்திலுள்ள பொருளடக்கம் :

மகாபாரதம் என்பது வேதங்களின் சாரம். அது நல்லொழுக்கம், ஞானம், அரசியல், மதம், தத்துவம், தருமம் ஆகிய கருத்துக்களின் களஞ்சியம் ஆகும். அதன் ஆசிரியர் தம் நூலின் முதல் அத்தியாயத்தில் தம்முடைய நூலில் என்ன இருக்கிறது என்று பிரம்மாவிடம் கீழ்க்கண்டவாறு சொல்கிறூர்: ''என்னுல் வேறு சமயங்களில் எடுத்துக்கூறப்பட்டுள்ள வேத இரககியங்களும், உபநிடதங்களின் உபதேசங்களும், வேத சடங்குகளின் விளக்கங்களும், இதிகாச புராணங்கள் கூறும் நுணுக்கமான அறிவுரைகளும், இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் ஆகிய முக்காலத்தைப் பற்றிய ஞானமும், முதுமை, மரணம், அச்சம், பிணி ஆகியவற்றின் சரியான விளக்கங்களும், வெவ்வேறு வகைப்பட்ட ஆசிரம தருமங்களும்,

துறவையும் பிரம்மச்சரியத்தையும் மேற்கொள்ள வேண்டிய முறைகளும், சூரியன், சந்திரன், பூமி ஆகிய கோள்களின் இயக்கங்களும் அவற்றின் ஆற்றல்களும், வேதங்களிலுள்ள ஆன்மீக உபதேசங்களும், தர்க்க சாஸ்திரம், மருத்துவக்கலை, தரும நியதிகள், பசுபத மதம், தெய்வீக வாழ்க்கை மானிட வாழ்க்கை ஆகியவைகளைப் பற்றியும், புனித நதிகள் நகரங்கள் நாடுகளை பற்றிய விவரங்களும், போர்க்கலை, மொழி, பேச்சு ஆகிய கலைகள், உலகியல் வாழ்க்கை நடத்தும் முறை — ஆகிய அனைவற்றைப் பற்றியும் இந்நூலில் கூறப்பட்டுள்ளது. இந்த நூலில் சேர்க்கப்படாத எதுவும் இவ்வுலகில் இல்லை. இதில் சொல்லப்படாதது எதுவும் இல்லை; உலகில் உள்ள எதைப்பற்றியும் சொல்லாமல் விடப்படவில்லை'' என்று கூறுகிறார். மகாபாரதத்தில் நூறாயிரம் பாடல்கள் உள்ளன.

ஆதிபர்வம், சபாபர்வம், வனபர்வம், விராட பர்வம், உத்யோகபர்வம், பீஷ்மபர்வம், துரோண பர்வம், கர்ணபர்வம், சல்லியபர்வம், சௌபதிக பர்வம், ஸ்ரீபர்வம், சாந்திபர்வம், அநுசாஸன பர்வம், அசுவமேதபர்வம், ஆசிரமவாசிகபர்வம், மௌசாலபர்வம், மகாப்ரஸ்தானிகபர்வம், சுவர்க்கரோகனிகபர்வம் ஆகிய பதினெட்டு பர்வங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பர்வத்திலும் அநேக துணைப்பர்வங்கள் உள்ளன.

**மகாபாரதத்தின் கதைச் சுருக்கம் :**

பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் இடையே இந்தியாவில் நடந்த ஒரு பெரும் போரைப் பற்றிய வரலாறு தான் மகாபாரதம். விசித்ர வீரியன் மரணத்திற்குப்பின் வியாசமுனிவர் மூலமாக திருதராஷ்டிரன், பாண்டு என்ற

சகோதரர்கள் பிறந்தார்கள். திருதராஷ்டிரன் பிறவிக்குருடனாக இருந்தபடியால் பாண்டு பட்டத்துக்கு வந்தான். ஆனால் அவன் அரசாட்சியைத் தன் அண்ணனை திருதராஷ்டிரனிடம் ஒப்புவித்துவிட்டு காட்டுக்குச் சென்றான். அங்கே அவனுக்கு யுதிஷ்டிரர் முதலான ஐந்து மக்கள் பிறந்தனர். அவர்கள் பாண்டவர்கள் எனப்பட்டனர். திருதராஷ்டிரனுக்குத் துரியோதனன் முதலான நூறு மக்கள் பிறந்தனர். அவர்கள் கௌரவர்கள் என்று அழைக்கப்பட்டனர். பாண்டவர்கள் சிறு குழந்தைகளாக இருந்தபோதே பாண்டு இறந்துவிட்டான். திருதராஷ்டிரன் பிதாமகரான பீஷ்மரின் உதவியுடன் நாட்டை ஆண்டான். பீஷ்மர் வாழ்நாள் முழுவதும் பிரமச்சரிய விரதம் பூண்டவர். பாண்டவர்களும் கௌரவர்களும் ஒன்றாக வளர்ந்து துரோணாச்சாரியாரிடம் ஒன்றாகக் கல்விகற்று, ஒன்றாகப் பயின்றார்கள், இருதரப்பினரும் அரசு தமக்கே உரியது என்று எண்ணினார்கள். அதனால் அவர்களுக்குள் பகைமை உணர்ச்சி மூண்டு அவர்களுக்கிடையே நாளுக்குநாள் படிப்படியாக உணர்வுகளும் உறவும் சீர்கேடடைந்தது. கௌரவர்கள் செய்த இடையூறுகளின் காரணமாகப் பாண்டவர்கள் வீட்டை விட்டு வெளியேறிப் பலவிதமான துன்பங்களையும் வருத்தங்களையும் அனுபவிக்க நேர்ந்தது. அவர்கள் துருபத மன்னனுடைய மகளை மணந்த பின் திருதராஷ்டிர மன்னன் பாண்டவர்களை மீண்டும் நாட்டுக்கு அழைத்து அவர்களுக்கு நாட்டில் பாதியைப் பிரித்துக் கொடுத்தான். பாண்டவர்கள் நாட்டில் நல்ல முறையில் ஆட்சி செலுத்தி நாட்டைப் பலவகைகளிலும் வளம் பெறச் செய்தார்கள். அவர்கள் இந்திரப்பிரஸ்தம் என்னுமிடத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டார்கள். அவர்கள் இராஜசூய யாகத்தை மிகவும் விமரிசை

யாக நடத்தினார்கள். அதற்கு அழைக்கப்பட்ட கௌரவர்கள் பாண்டவர்களின் செல்வச் செழிப்பைக்கண்டும், அங்கு தங்களை எள்ளி நகையாடிய சொற்களால் புண்பட்டும், அளவுகடந்த பொறாமையும் வெறுப்பும் கொண்டு பகைமை உணர்வும் பழிவாங்கும் உணர்வும் மனத்திற் கொண்டு திரும்பினார்கள். பின்னர் சதியாலோசனை செய்து பாண்டவர்களைச் சூதுக்கு அழைத்து, சூதுபோரில் பாண்டவர்களின் செல்வம், நாடு, மற்ற உடைமை ஆகியவற்றை வென்றதோடு பாண்டவர்களையும் அடிமைகளாக்கிக் கொண்டு அவர்கள் மனைவி திரௌபதியை அரசவையில் எல்லோர் முன்னிலையிலும் ஏசி, இழிவாக நடத்தினார்கள். முடிவில் பாண்டவர்கள் பன்னிரெண்டு ஆண்டுகள் வனவாசமும் மேலும் ஓராண்டு காலம் யாரும் அறியாமல் மறைந்து அஞ்ஞாத வாசமும் செய்ய வேண்டுமென்றும் அதன் பின்னர் திரும்பி வந்து தங்கள் நாட்டைப் பெற்றுக் கொள்ளவேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. அவ்வாறே செய்தும், அவர்கள் திரும்பி வந்தபோது கௌரவர்கள் அவர்களுக்கு நாட்டைத் திருப்பிக்கொடுக்க மறுத்தார்கள். அதன் காரணமாக தாயாதிகளுக்குள்ளே ஏற்பட்ட போரில், கௌரவர்களும் இருதரப்பிலுள்ள போர் வீரர்களும் மடிந்தார்கள். பாண்டவர்கள் உயிர்பிழைத்து வெற்றி பெற்றார்கள்.

பாண்டவர்களுக்குக் கண்ணபிரான், மற்றும் துருபதன், விராடன் ஆகிய உறவினர்களின் துணை கிடைத்தது. அவர்களுடைய சேனையில் ஏழு பிரிவுகள் (அக்ஷௌணிகள்) இருந்தன. கௌரவர்களுக்கும் அவர்களுடைய உறவினர்களான மன்னர்களும், நண்பர்களும் உதவியாக இருந்தனர். அவர்களுடைய படையில் பதினொரு பிரிவுகள்

(அக்ஷௌணிகள்) இருந்தன. பாண்டவர்கள் தங்கள் பக்கமிருந்த அறம், இறையருள் ஆகியவற்றின் காரணமாக வெற்றி பெற்றார்கள்.

இந்தியாவின் மிகச்சிறந்த இதிகாசமாகிய மகாபாரதம் உலகிலேயே மிகச்சிறந்த ஒரே நூலாகும். அது ஐந்தாம் வேதம் என்றழைக்கப்படுகிறது. மகாபாரதமாகிய கதையுடன் எண்ணற்ற சிறுகதைகளும் இருக்கின்றன. அவைகள் பல நீதிகளையும் இந்தியாவில் பண்டைக்காலத்தில் வாழ்ந்த மக்களைப்பற்றிய விளக்கங்களையும் அளிக்கின்றன. அவர்களின் அரசியல், சமுதாய, மத வாழ்க்கைகளின் வரலாறுகளும் அவைகளில் காணப்படுகின்றன. இந்த நூலில் உள்ள கதைகள், பாடல்கள், சிறுவர்களுக்கான கதைகள், கட்டுக்கதைகள், நீதிக்கதைகள், உபதேசங்கள் ஆகியவை மிகவும் சிறந்தவையாகவும் நல்லமுறையில் அறிவூட்டுவதாகவும் இருக்கின்றன. வலிமை பொருந்திய வீரர்கள், மிகவும் ஆற்றல் படைத்த போர்வீரர்கள், ஆழ்ந்த சிந்தனையாளர்கள் நுண்ணிய தத்துவ மேதைகள், முனிவர்கள், ஞானிகள் கற்புடைய பத்தினிப் பெண்கள் ஆகியவர்களின் சிறந்த வரலாறுகள் மகாபாரதத்தில் உள்ளன.

மகாபாரதத்தின் பீஷ்மபர்வத்தில் பகவத்கீதை என்னும் மிகப் புனிதமான தெய்வீக உபதேச மடங்கிய பகுதி இருக்கிறது. அது இறைவனாகிய கண்ணனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையே நடைபெற்ற உரையாடல் ஆகும். பகவத்கீதை மகாபாரதத்தின் சாரமாகும். அதில் யோகத்துக்கு முக்கியமான இடம் அளிக்கப்பட்டுள்ளது. மகாபாரதம் முழுவதிலும் யோகத்தைப் பற்றி நேரடியாகவும் மறைமுகமாகவும் கூறப்பட்டுள்ளதைப்

பார்க்கும்போது, அது யோகத்தைப் பற்றிய நூல் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

இந்த நூலின் தொடக்கத்திலுள்ள பாடல்களையும், இறுதியிலுள்ள பாடல்களின் ஒரு சில கவனிக்கத்தக்கவை. "உலகிலுள்ள பொருள்கள் அனைவற்றுக்கும் ஆதாரமானவனும், ஆதரவானவனும் என்றும் நிலைபெற்றிருப்பவனும், மாறாதவனும், சுயம்பிரகாசமுள்ளவனும், எல்லா உயிர்களின் உள்ளேயும் உறைபவனும், மகா புருஷனும் ஒப்பற்ற பெருமையை உடையவனுமாகிய வாசுதேவனைப் பற்றியும் பாண்டவர்களுடைய சத்தியத்தையும் தர்மத்தையும் பற்றியும் வியாச முனிவர் பாடினார்" என்று நூலின் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளது. "கூப்பிய கரங்களுடன் மிகவும் உரத்த குரலில் நான் கூவுகின்றேன். ஆனால் என் சொற்களைக் கேட்பவர் எவருமில்லை. அவைகளைக் கேட்பதால் அனைவரும் மேலான அமைதியையும், மகிழ்ச்சியையும், என்றுமுள்ள பேரின்பத்தையும் அடையலாம், கடமையைச் செய்வதன் மூலம் அனைவரும் செல்வத்தையும் விரும்பியவற்றையும் அடையலாம். மக்கள் ஏன் கடமையைச் செய்வதில்லை? என்ன நேரிட்டாலும் — உயிரே போனாலும் — கடமையைச் செய்யத் தவறக்கூடாது. ஆசை, சினம், சூழ்ச்சி தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுதல் ஆகிய காரணங்களுக்காகக் கடமையைச் செய்வதில் தவறக்கூடாது. இதுதான் பாரத காயத்ரி. மனிதனே! தினந்தோறும் உறங்கச் செல்லும்போதும், காலையில் எழும்போதும் இதையே திரும்பத் திரும்பச் சொல். உனக்கு எல்லாம் கிடைக்கும். பெயர், புகழ், முன்னேற்றம், நீண்ட ஆயுள், நிரந்தர அமைதி, அமரநிலை ஆகியவற்றைப் பெறுவாய்" என்று நூலின் முடிவில் கூறப்பட்டுள்ளது.

மகாபாரதத்தின் பாத்திரங்கள் :

இந்த இதிகாசத்தில் வரும் ஒவ்வொரு பெயரும் ஒரு அழியாத அமரநிலை பெற்றுள்ளது. அது ஒவ் வொன்றும் நமக்கு ஒரு பாடத்தைக் கற்பிக்கிறது. மரணத்தையே வென்றவரும் தேவர்களாலும் போரில் வெல்லுதற்கரிய ஆற்றலையுடையவரு மான பீஷ்மர் நமக்கு விந்தையான உணர்வைத் தம் தியாகம், அரிய வீரம், தூய்மை ஆகியவற்ருல் ஏற்படுத்துகிருர். யுதிஷ்டிரரை இன்றும் நீதிக்கும், நேர்மைக்கும் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். அவர் இன்றைக்கு இருக்கும் அரசர்களுக்கும், ஆட்சி யாளர்களுக்கும் ஒரு முன் மாதிரியாக இருக்கிருர். நீதி, பொறுமை, உறுதி, தூய்மை, சத்தியம், மன்னிக்கும் தன்மை ஆகிய பண்புகளின் உருவமாகத் திகழ்ந்தார். அவர் பெயரை நினைக்கும் பொழுதே நம் உள்ளத்தில் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டு, சத்தி யத்தின் பாதையில் தர்மத்தின் வழியே செல்லும் படி நம்மைத் தூண்டுகிறது. தன்னுடைய கொடையினுலும் தாராள மனப்பான்மையினுலும் கர்ணன் இன்றும் நம் உள்ளத்தில் நிலைபெற்றிருக் கிருன். கர்ணனின் பெயர் தொன்று தொட்டு வழங்கப் பெறுகிறது. மிகவும் தாராள மனமும், கொடையுள்ளமும் உள்ள ஒருவனைப் பார்க்கும் போது, ''இவன் கொடையில் கர்ணன்'' என்று அனைவரும் கூறுகின்றனர். அர்ச்சுனன் வியந்து பாராட்டிய கண்ணபிரானை நம்மைக் காக்கும் இறைவனுகப் போற்றி வணங்குகிறேம். நமக்கு ஏதாவது இடையூறே, துன்பமோ நேரிட்டால், ''இறைவா! அக்காலத்தில் திரௌபதியையும், கஜேந்திரனையும் காத்ததைப் போன்றே எங்களையும் காக்க வேண்டும்'' என்று வேண்டிக்கொள்கிறேம்.

காலத்தின் மாறுதல்களால் பல அழிவுகளும், மறைவுகளும் ஏற்பட்டபோதிலும் மகாபாரதத்தின்

தலை சிறந்த வீரர்களின் சிறப்புக்கும், புகழுக்கும், மேன்மைக்கும் எந்தவிதமான அழிவும் ஏற்படவில்லை. அவர்கள் பண்புகளில் மாசுபடாமல் சிறப்புடன் இருக்கின்றனர். எனவே அவர்களுடைய செயல்களும் பாராட்டத் தக்கவையாகவும், வியக்கத்தக்கவையாகவும், மிகவும் மேன்மையானவையாகவும் இருக்கின்றன. அனைத்து நாடுகளிலும் வாழ்ந்த உயர்ந்த மக்களின் வாழ்க்கையில் வெற்றிக்குக் காரணம் அவர்களுடைய மனவுறுதி தான். கடமையை ஆற்ற வேண்டிய காலம் வரும் போது, வீரர்கள், தங்கள் கடமையாகிய பாதையினின்றும் மிகச் சிறிய அளவில் கூடத் தவற மாட்டார்கள். பீமனுடைய அளவு கடந்த வலிமையையும், அர்ச்சுனனின் வில்லாற்றலையும் குறி தவறாது எய்யும் திறமையையும், சகாதேவனின் வாள்வீச்சையும், நகுலனுக்கிருந்த சோதிடக்கலைத் திறமையையும், அனைத்து நிலைகளிலும் யுதிஷ்டிரனின் நீதியும், நேர்மையும் காணும் ஒருவர் பெரும் வியப்படைந்து, திகைப்பினால் வாய் பேச முடியாத நிலை ஏற்படும். பீஷ்மர், கர்ணன், துரோணர், பரசுராமர், ஜயத்ரதன், திருஷ்டத்துய்மன், அசுவத்தாமன் மற்றுமுள்ள வீரர்களின் வீரச் செயல்கள் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டவை. இந்த வீரர்கள் கடும் தவமியற்றி இறைவனிடமிருந்து அரிய வரங்களைப் பெற்றிருந்தார்கள். அதன் காரணமாகத்தான் வருணனைக்கு எட்டாத அரிய வீரச் செயல்களை அவர்களால் செய்ய முடிந்தது.

திரௌபதி, சாவித்திரி, குந்தி, மாதிரி, தமயந்தி, காந்தாரி ஆகிய பெண்மணிகள் அனைவரும் தங்கள் கணவன்மாரிடம் மிகவும் பக்தியுடன் இருந்தார்கள். மிகவும் கடும் துன்பங்களையும், பெருத்த இடையூறுகளையும், துயரங்களையும்,

வருத்தங்களையும் சந்திக்க நேரிட்ட பொழுது மிகவும் மனவுறுதியுடனும், அச்சமற்றும் விளங்கினார்கள். அவர்கள் தெய்வபக்தி நிறைந்தவர்கள். அவர்கள் தங்கள் கற்பு, நல்லொழுக்கம் ஆகியவற்றின் வலிமையால் தங்களுக்கேற்பட்ட துன்பங்களைப் பொறுத்துக் கொண்டார்கள். அவர்கள் சிறந்த தாய்மார்களுக்கும் மனைவிமார்களுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கினார்கள். அதனால்தான் அவர்களுடைய பெயர்கள் என்றும் புகழுடன் அழியாமல் விளங்குகின்றன.

பாண்டவர்களும் திரௌபதியும், நளனும், தமயந்தியும், சாவித்திரியும், சத்தியவானும் வாழ்க்கையின் இலட்சியம் அல்லது முழுப்பயனை துன்பத்தின் மூலமும் துயரத்தின் மூலமும்தான் அடைய முடியும் என்ற உண்மையை அவர்கள் பட்ட துன்பத்தின் மூலம் நமக்குத் தெளிவாக உணர்த்துகிறார்கள். மனிதன் துன்பத்தின்மூலம் உருவாக்கப்பட்டு, ஒழுக்கத்தையும் வலிமையையும் பெறுகிறான். அழுக்கு நிறைந்த தூய்மையற்ற தங்கம் உலையில் உருக்கப்பட்டு தூய்மைப்படுத்தப் படுவதைப்போல், தூய்மையற்றும் குறைபாடுகளுடனும் இருக்கும் பலவீனமான மனிதன் துன்பமும் வருத்தமுமாகிய உலையில் உருக்கப் பட்டுத் தூய்மையையும், முழுமையையும், வலிமையையும் பெறுகிறான்.

குருடனாகிய திருதராஷ்டிரன் அவித்தை அல்லது அறியாமையைக் குறிக்கிறான். யுதிஷ்டிரன் தர்மத்தையும், துரியோதனன் அதர்மத்தையும், திரௌபதி மாயையும், பீஷ்மர் பற்றற்ற நிலையையும், துச்சாதனன் தீய இயல்பையும், சகுனி பொறாமையையும் வஞ்சகத்தையும், அர்ச்சுனன்

ஜீவான்மாவையும், கண்ணபெருமான் பரமான்மாவையும் குறிக்கிறார்கள். குருக்ஷேத்திரம் என்பது அந்தக்கரணத்தைக் குறிக்கிறது.

மகாபாரதம் புகட்டும் நீதிகள் :

மகாபாரத்தில் கூறப்படும் செய்தி சத்தியம் கடமை ஆகியவற்றின் சிறப்பாகும். இந்த இதிகாசம் படிப்பவர்களின் மனதில் ஒரு எழுச்சியை உண்டாக்கி அவர்களைச் சத்தியம், தர்மம் (கடமை) ஆகியவற்றின் பாதையில் செல்லுமாறு வழிப்படுத்துகிறது. அது நல்ல செயல்களையே செய்யுமாறும், கடமையைச் செய்யுமாறும், இந்தப் பிரபஞ்சத்தின் மாறக் கூடிய நிலையையும், வீண் ஆடம்பரங்கள், புலன் இன்பங்களின் மாயையையும், விருப்பு வெறுப்பற்ற மனப்பான்மையை மேற்கொண்டு நிரந்தரமான பேரின்பத்தையும் அமர நிலையையும் அடையுமாறும் தீவிரமாகத் தூண்டுகிறது. யுதிஷ்டிரன் செய்ததையே செய்யுமாறும் துரியோதனன் செய்ததை செய்யாமலிருக்குமாறும் மக்களை அது தூண்டுகிறது. ''தர்மத்தையே உறுதியாகப் பற்றிக்கொள். அப்போது இந்த வாழ்க்கையின் இறுதிப்பயனாகிய மோக்ஷத்தையும் நிலை பெற்ற இன்பத்தையும் அடைவாய்.'' இதுதான் மகாபாரதத்தின் இறுதி இலட்சியம் அல்லது மையக்கருத்து ஆகும்.

புராதனமானதும் புகழ்மிக்கதுமான இந்த இதிகாசம் உன் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் உனக்கு வழிகாட்டட்டும். நீ தர்மத்தைக் கடைபிடிப்பாயாக. மகாபாரதத்திலுள்ள மகாத்மாக்கள் உன்னுடைய அறிவைத் தூண்டுவார்களாக. யுதிஷ்டிரனின் நேர்மையையும், பீஷ்மரின்

தூய்மையையும், அர்ச்சுனனின் வீரத்தையும், கர்ணனின் கொடையுள்ளத்தையும் பெறுவாயாக. அந்த வீரர்களின் பாட்டனாரும் மகாபாரதத்தை இயற்றியவரும், சிரஞ்சீவியும், திருமாலின் அவதாரமுமாகிய வேத வியாசரின் புகழ் ஓங்கட்டும்! நீங்கள் அவருடைய ஆசிகளைப் பெறுவீர்களாக!

---

## பாகவதம்

இந்துக்களுடைய மத நூல்களின் வரலாற்றிலே புராணங்கள் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றன. அவை தத்துவார்த்தமாகவும் மத சம்பந்தமாகவும் உள்ள செய்திகள் எல்லாவற்றையும் உடையதாய் ஒரு அரிய பொக்கிஷம் போன்றவை. ஸ்ருதிகளிலும், ஸ்மிருதிகளிலும் உள்ள விஷயங்களைச் சாதாரண மக்களால் எளிதில் தெரிந்து கொள்ள முடியாது. எனவே கருணை மூர்த்தியாகிய வேத வியாசர் மக்களின் நன்மைக்காகப் பதினெட்டு புராணங்களைத் தொகுத்து அமைத்தார். ஸ்ருதிகளில் சொல்லப்பட்டுள்ள நுணுக்கமான உண்மைகளையும் ஆழ்ந்த பிரச்னைகளையும் எளிதில் மக்களுக்கு விளங்குமாறு பதினெட்டு புராணங்களிலும் விளக்கிக் கூறியுள்ளார். இந்து மதம், நல்லொழுக்கம் ஆகியவற்றின் தொடர்பான அரும் பொருள் களஞ்சியம் என்றே அவற்றைக் கூறலாம். வேதத்திலுள்ள உண்மைகளைக் கட்டுகதைகள், சிறுகதைகள் ஆகியவற்றின்மூலம் எல்லோரும் அறியுமாறு செய்வது தான் புராணங்களின் நோக்கம். புராணங்களில், தேவதைகளைப் பற்றிய கதைகள், கதைகள், தத்துவம், மதம், கற்பனைக் கதைகள் ஆகியவைகள் உள்ளன.

பாகவத புராணத்தின் தோற்றம் :

ஒரு சமயம் வியாச பகவான் சரசுவதி நதியின் புனிதமான கரையில் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் உள்ளத்தில் குழப்பம் மிகுந்திருந்தது. மனத்தில் திருப்தியும், அமைதியும் இல்லை. ''பிரம்மச்சரியத்தைத் தீவிரமாக மேற்கொண்டிருக்கிறேன். வேதங்களை ஓதுவதிலும் ஆசாரியர்களை வழிபடுவதிலும், வேள்விகளைச் செய்வதிலும் கவனமாகவும், சரிவரவும் நடந்து கொள்கிறேன் ஆசாரியர்களின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொண்டிருக்கிறேன். மகாபாரதத்தை எழுதியதன்மூலம் மக்களுக்கு வேதங்களின் பொருளை விளக்கி இருக்கிறேன். அதன்மூலம் தர்மம் முதலிய பண்புகளின் பொருளை மிகவும் அறிவிற் குறைந்தவர்கள் கூட எளிதில் தெரிந்து கொள்ள முடியும் எனினும் என் பணி இன்னும் முழுவதும் செய்யப்படவில்லை,'' என்று சிந்திக்கத் தொடங்கினார்.

அந்த வேளையில் நாரத முனிவர் வியாச பகவானின் முன்னே தோன்றினார். ''நீ அறிய வேண்டியவற்றை எல்லாம் அறிந்துள்ளாய். மிகச் சிறந்த நூலாகிய மகாபாரதத்தை எழுதி இருக்கிறாய். அதில் இல்லாத பொருளே இல்லை. அப்படியிருந்தும் ஏன் அமைதியற்றும் மனச் சமாதானமற்றும் இருக்கிறாய்?'' என்று நாரதர் வேத வியாசரைக் கேட்டார்.

அதற்கு வேதவியாசர், ''நீங்கள் சொல்வதை ஏற்றுக்கொள்கிறேன். இருப்பினும் என் மனதில் திருப்தியில்லை. அதன் காரணத்தைத் தங்களிடமிருந்து அறிந்து கொள்ள விரும்புகிறேன். பிரம்மாவிடமிருந்து தோன்றிய தாங்கள் மிகவும் ஞானவான்,'' என்று நாரதரிடம் தெரிவித்தார்.

மகா முனிவரே! தர்மத்தைப் பற்றியும் மற்ற பொருள்களைப் பற்றியும் தாங்கள் பாடியிருக்கிறீர்கள். ஆனால் வாசுதேவனுடைய பெருமையைப் பற்றி பாடவில்லை. இதன் காரணமாகத்தான் இறைவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. எனவே இறைவனாகிய கண்ணனின் பல்வேறு வகைப்பட்ட பெருமைகளைப் பற்றிப் பாடுங்கள். மக்கள் அவற்றை அறிந்து அதனால் மோட்சத்தை அடையட்டும். இந்தப் பிரபஞ்சமே இறைவனின் ஒரு அம்சமாகும். ஏனென்றால் இறைவன்தான் பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்து அழிக்கிறான். இவற்றைப் பற்றி எல்லாம் உங்களுக்கே தெரியும். ஆனால் மக்களுக்கு இவற்றில் ஒரு பகுதியையே எடுத்துரைத்து இருக்கிறீர்கள். எனவே எங்கும் நிறைந்துள்ள ஹரியின் பெருமையைப் பாடுங்கள். அதைத் தெரிந்துகொள்ளும் மிகவும் ஞானவான்களான பெரியவர்களும் கூட தாங்கள் நாடிச் செல்லும் இலட்சியத்தை அடையட்டும். சம்சாரத்தில் மீண்டும் மீண்டும் தள்ளப்படுவதிலிருந்தும் அதிலுள்ள துன்பங்களினின்றும் மீள்வதற்குமான வழி இது ஒன்றுதான், இதைத்தவிர வேறில்லை என்பதை மிகப்பெரிய ஞானிகள் அறிவார்கள்'' என்று நாரதர் சொன்னார். அதன் பிறகு வேதவியாசர் பதினெட்டாயிரம் பாடல்களுடன், முன்னூற்றைம்பது பிரிவுகளடங்கிய பன்னிரெண்டு அத்தியாயங்களாலான ஸ்ரீமத் பாகவதம் என்னும் நூலை இயற்றினார். அந்த நூல் பகவான் அல்லது திருமாலின் பெருமைகளைப் பற்றிப் பேசுவதால் அது பாகவதம் என்று பெயர் பெற்றது. இந்திய மத நூல்களுக்குள்ளே ஆதார (பிரமாணமான) நூல்களில் இதுவும் ஒன்றாகும். அது இந்தியாவிலுள்ள மிகவுயர்ந்த நூலாகும். மக்களின் எண்ணத்தையும் உணர்வையும் அது நெறிப்படுத்து

கிறது. புராணங்கள் அனைவற்றின் சாரமும் அதில் அடங்கியுள்ளது.

இறைவனின் அவதாரங்கள் :

பாகவத புராணம் என்பது பகவானாகிய திருமாலின் பல்வேறு அவதாரங்களைப் பற்றிக் கூறும் நூலாகும். உலகத்துக்கு நேரிட்ட ஒரு பேராபத்தினின்றும் காப்பாற்றுவதும், தீயவர்களை அழித்து நல்லவர்களைக் காப்பதும்தான் ஒவ்வொரு அவதாரத்தின் நோக்கமும் ஆகும். மச்சாவதாரம் (மீன்), கூர்மாவதாரம் (ஆமை), வராகவதாரம் (பன்றி), நரசிம்மாவதாரம் (மனிதச் சிங்கம்), வாமனவதாரம் (குறளன்), பரசுராமாவதாரம் (கோடரி பிடித்த மனிதன்), இராமாவதாரம் (இராமாயணத்தின் கதாநாயகன்) சீதையின் கணவன் — இராவணனை வதம் செய்தவன் — கிருஷ்ணன் (ருக்மணியின் நாயகன் – கீதாசாரியன்) புத்தர் (ராஜரிஷி, புத்தமதத்தை நிறுவியவர்) கல்கி (கலியுகத்தின் முடிவில் வெள்ளைக் குதிரையின் மேல் வருபவர்) என்பன திருமாலின் வெவ்வேறு அவதாரங்களாகும்.

மச்சாவதாரத்தின் நோக்கம் வைவஸ்த மனுவைப் பிரளயத்தினின்றும் மீட்பதாகும். பிரளயத்தின்போது மறைந்த சில அரிய பொருள்களைப் மீட்பதும், தேவர்களும் அசுரர்களும் அமுதம் பெறுவதற்காகப் பாற்கடலைக் கடைந்தபோது மத்தாகிய மந்திரமலையை முதுகில் தாங்குவதும் கூர்மாவதாரத்தின் நோக்கமாகும். இரண்யாட்சன் என்னும் அரக்கனால் கவர்ந்து செல்லப் பட்டு நீருக்கடியில் ஒளித்துவைக்கப்பட்ட பூமியை மீட்பது வராகாவதாரத்தின் நோக்கமாகும். பக்த பிரகலாதனின் தந்தையும் அரக்கனுமாகிய இரண்ய

கசிபுவின் கொடுமையிலிருந்து உலகத்தை விடுவிப்பது, பாதிமனித உருவமும் பாதி சிங்க உருவமும் கொண்ட நரசிம்மாவதாரத்தின் நோக்க மாகும். பலி என்ற அரசனின் தவத்தாலும் பக்தி யாலும் வலிமை குறைந்திருந்த தேவர்களின் ஆற்றலை மீண்டும் பழைய நிலைக்கே கொண்டு வர பகவான் வாமனுவதாரம் எடுத்தார். அரசர்களின் கொடுங்கோலில் இருந்து நாட்டை விடுவிப்பதற் காகப் பகவான் பரசுராம அவதாரம் எடுத்தார். பரசுராமர் க்ஷத்திரிய வம்சத்தின் இருபத்தொரு தலைமுறைகளை அழித்தார். இராமாவதாரத்தில், கொடியவனுன இராவணனை பகவான் கொன்றார். கிருஷ்ணுவதாரத்தின் நோக்கம் கம்சனையும் மற்ற அரக்கர்களையும் அழிப்பதோடு, ஒப்பற்ற கீதோப தேசம் செய்வதும், பக்தி மார்க்கத்தின் மையமாகத் தன்னை ஆக்கிக்கொள்வதுமாகும். உயிர்களைப் பலியிடும் வழக்கத்தைத் தடுப்பது புத்தாவதாரத் தின் நோக்கம். கல்கி அவதாரத்தின் நோக்கம் தீயவர்களை அழிப்பதும் தர்மத்தை நிலை நாட்டுவது மாகும்.

பாகவத புராணத்தின் ஒப்பற்ற தன்மை:

பாகவத புராணத்தில்தான் இந்த பிரபஞ் சத்தின் வரலாறு முறைப்படி கூறப்பட்டுள்ளது. பகவான் கண்ணன்தான் இந்த ஈடு இணையற்ற நூலின் தலைவன். இந்த நூல் பக்தியைப் பற்றி ஆதாரமாகக் கொள்ளக் கூடிய நூலாகும். பாகவதம் ஞானத்தோடு இணைந்துள்ள பக்தியைப் பற்றிக் கூறுகிறது (பக்தி யுக்த ஞானம்). அது பக்தியை ஞானத்தினின்றும் தனியே பிரிக்கவில்லை. பக்தியைச் சரிவர அடைவதற்கு ஞானம் மிகவும் உதவுகிறது என்று இந்த நூல் கூறுகிறது.

பாகவதத்தில் பக்தியாகிய இறைவன் மீதும், பின்னர் ஆகாயவெளியின் மீதும் மனதைச் செலுத்தி பின்னர் அதை பரப்பிரம்மத்தோடு ஐக்கியமடையச் செய்யவேண்டும் என்று அதே ஸ்காந்தத்தில் சொல்லப்படுகிறது. இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் நிமி என்ற அரசனுக்கு ஒன்பது முனிவர்களால் எடுத்துரைக்கப்படுகிற பாகவத தருமம் மிகவும் வியக்கத்தக்க முறையில் உணர்ச்சி யூட்டும் வகையிலும் உள்ளக்கிளர்ச்சி ஏற்படுத்தும் முறையிலும் அமைந்துள்ளது. பத்தாவது ஸ்காந்தத் தில் இறைவனுடைய லீலைகள் எல்லாம் எடுத்துக் கூறப்படுகின்றன. தெய்வீகக் குழந்தையின் இளம் பருவ விளையாட்டுகளும் பொழுதுபோக்கு களும், வேடிக்கைகளும் களியாட்டங்களும், குமார லீலைகளும், பிருந்தாவன லீலைகளும், மதுர லீலை களும், துவாரகா லீலைகளும், குருக்ஷேத்திர லீலை களும், பிரபாச லீலைகளும் இந்த ஸ்காந்தத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. இந்த ஸ்காந்தத்தில் தொண்ணூறு பிரிவுகள் உள்ளன. இந்தஅத்தியாயத் தில்தான் உள்ளத்தின் புலம்பலும், மனத்திலுள்ள அழுக்குகள் நீங்கிய பிறகு காதல் மயக்கம் கொண்ட மனித ஆன்மா வெளிப்படுத்தும் உணர்ச்சிகளும் நாம் காண்கிறோம். மனதிலுள்ள அழுக்குகள் நீங்கிய பிறகு உள்ளம் தூய்மை பெற்று இறைவனை நாடிச் சென்று, இறுதியில் இறைவனோடு ஒன்றுபடுகிறது. உலகியல் எண்ணங்கள் நிறைந்த உள்ளம் படைத் தவர்களால் இந்த ஸ்காந்தத்தில் கூறப்பட்டுள்ள உண்மைகளைப் புரிந்து கொள்ளமுடியாது.

பாகவத சப்தாகமங்கள் நம் நாட்டில் எல்லா இடங்களிலும் நடத்தப்படுகின்றன. அங்கு பாகவதம் முழுவதும் ஏழு நாட்களில் வாசித்து முடிக்கப்படுகிறது. அப்போது பாகவதம் முழுவ தையும் படிக்கக் கேட்டு அதிலுள்ள பொருளைத்

தெரிந்துகொள்ள நல்வாய்ப்பு ஏற்படுகின்றது. இந்த வாழ்க்கையின் அல்லல்களுக்கு பாகவதம் ஆறுதல் அளிக்கிறது. அழகாகவும், மனதைக் கவரும் வகையிலும் சொல்லாற்றலில் சிறந்தும், தத்துவக்கருத்துகள் நிறைந்தும் அமுதம் ஞான மாகிய அனைத்துத் துன்பங்களையும் நீக்கும் பானமாகிய மருந்துடன் கலந்துள்ளது.

உத்தவர் இவ்வுலகை நீத்துச் செல்வதற்கு முன்னர் பகவான் கிருஷ்ணன் அவருக்குக் கூறிய அறிவுரைகள் மிகவும் வியக்கத்தக்க முறையில் அமைந்துள்ளன. இவைகள் பதினோராம் ஸ்காந்தத் தில் (அத்தியாயம்) அடங்கியுள்ளன. யாதவர் களுடைய தலைவனும், கண்ணனுடைய தலைமைச் சீடனும், நண்பனுமாகிய உத்தவருடைய ஐயங்கள் அனைவற்றையும் கண்ணன் போக்குகிறான். பல பொருள்களைப் பற்றிக் கண்ணன் அறிவுரை கூறு கிறான். அவற்றுள் கீழ்க்கண்ட அறிவுரை முக்கிய மானதும், நம் காதுகளில் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருப்பதும் ஆகும். ''எல்லாப் பொருள் களிலும் என்னைப்பார். என்னையே சரணாக அடைந்துவிடு. செயல்கள் அனைத்தையும் என் பொருட்டே செய். பற்றுதல் அனைத்தையும் துறந்து விடு. என்னிடம் மாறாத பக்திகொண்டிரு. என் பெருமைகளைப்பாடு.''

வெவ்வேறு வகையான சாதகர்களுக்கும் பொருத்தமான வெவ்வேறு வகையான தியான நிலைகளை பாகவத புராணம் எடுத்துக்கூறுகிறது. ஆரம்பநிலையிலுள்ள ஒருவர் விராட்புருஷனைத் தியானம் செய்யவேண்டுமென்று அதில் கூறப்படு கிறது. சாதகன் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் இறைவனுடைய உடல் என்று நினைக்கவேண்டும். இது இரண்டாவது ஸ்காந்தத்தில் கூறப்பட்டுள்ளது.

நம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் இறைவனுடைய உருவத்தைப் பற்றியும், மற்றும் இறைவனுடைய பாதாதிகேசம் (அடிமுதல் தலைவரை) வரையிலுள்ள உறுப்புக்களின் வருணனைகள் இதே ஸ்காந்தத்திலும், மூன்ருவது ஸ்காந்தத்திலும் கொடுக்கப்பட்டுள்ளன. இதயத் தாமரையில் முதல் அடுக்காக அக்கினியையும், இரண்டாவதாக சூரியனையும், மூன்ருவதாகச் சந்திரனையும் எண்ணி மூன்றடுக்குகளையும் தியானிக்க வேண்டுமென்று பதினேராம் ஸ்காந்தத்தில் சொல்லப்படுகிறது. அதே ஸ்காந்தத்தில் முதலில் கிருஷ்ணனுக விளங்குகிறது. அது தெய்வீக ஞானம் நிறைந்த ஒரு விலை மதிப்பற்ற கலைக்களஞ்சியம் போன்றது. அதைப் படிப்பதால் பக்தி தூண்டப்படுகிறது. அதனுல் ஞானம் நிறைந்து, வைராக்கியம் ஏற்படுகிறது. இந்த நூலில் வாசுதேவனின் பல்வேறு வகைப்பட்ட பெருமையும், புகழும் விளக்கமாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

---

